REGD.No. M. 6311 ★ தனி இதழ் 1 அணு ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 55630

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் — ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The official organ of the D.P.F.

மலர் 3] சென்னை: கார்த்திகை 10உ சனி (26—11—55) ★ ★ வெளியீடு: கார்த்திகை 11உ ஞாயிறு (27—11—55) [இதழ் 141

## ரூ. 65 கோடி பெறுமான பயிர் நாசம்!

புதுடில்லி, நவ. 25—

அசாம், ஒரிசா, பீகார், மேற்கு வங்கம், உ. பி., டில்லி, பஞ்சாப், பெப்சு, ஆந்திரா ஆகிய மாநிலங்களில், இந்த நடைமுறை ஆண்டில் ஏற்பட்ட வெள்ளச் சேதங்களின் விளைவாக, மொத்தத்தில் ரூ 65 கோடி பெறுமான பயிர்களுக்குச் சேதம் விளைந்திருக்கின்றதெனத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

மேலும், இந்த வெள்ளச் சேதங்களின் விளைவாக 759 பேர்கள் உயிர் துறந்தனர் என்றும், 24,000 கால்நடைகள் வெள்ளப் பெருக்கில் அடித்துச் செல்லப்பட்டன என்றும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது

# 'நிர்வாகத்தில் காங்கிரஸ் கட்சியினர் தலையிடுகின்றனர்'

## 'நானே அதற்கு பலியாகியிருக்கிறேன்'

## 'அமைச்சரே இவ்வுண்மையை அறிவார்'

### 'என் குற்றச்சாட்டை மெய்ப்பிக்க என்னிடம் ஏடுகள் உள்ளன'

*சென்னை சட்ட சபையில் சுயேச்சை உறுப்பினர் டி. கே. ராஜாவின் அறைகூவல்*

சென்னை, நவ. 25—

"காங்கிரஸ் கட்சியினர் அரசாங்க நிர்வாகத்தில் குறுக்கிடுகின்றனர். அதிகாரத்திலுள்ள (காங்கிரஸ்) கட்சி, தினசரி அரசாங்க நிர்வாகத்தில் தலையிடுகிறது என்றே நான் சொல்லுகிறேன். என்னால், என் சொல்லை மெய்ப்பிக்க முடியும். அதற்கான ஏட்டாதாரம் என்னிடம் உள்ளது. அத்தகு தலையீட்டிற்கும், கட்சிக் கொடுமைக்கும் நானே முதன்மை பலியாக ஆகியிருக்கிறேன். இந்த (நிதி) அமைச்சரும் அவ்வுண்மையை அறிவார்."

இத்தகவலை, சட்ட சபையில் இராமநாதபுரம் சுயேச்சை உறுப்பினரான டி கே. ராஜா அவர்கள் கூறினார். இடைமறித்தார் நிதி அமைச்சர். அதன் பிறகே, ஆதாரம் உண்டென்றும், அமைச்சரே அறிந்த விஷயம் என்றும் உறுப்பினர் மேலும் உறுதியாகக் கூறினார்.

## 'வடநாட்டு ஆதிபத்தியக்காரருக்கு தென்னாட்டில் இடம் அளிப்பதேன்?'

### சட்டசபையில் எதிர்க்கட்சித் தலைவர் கேள்வி

*தொழில் அதிபர்கள் எவரும் முன்வரவில்லையென அமைச்சர் சுப்பிரமணியம் மழுப்பல்*

சென்னை, நவ. 25—

"நிறுவப்படவிருக்கும் சோடா தொழிற்சாலையைத் திறம்பட நடத்தக்கூடியவர்கள் எவரும் இல்லை என்று நிதி அமைச்சர் தெரிவித்திருக்கிறார்; ஆனால், இந்த முடிவுக்குச் சர்க்கார் வருமுன் ஏற்கனவே நல்ல தொழிற்சாலைகள் ஏற்படுத்தி நடத்திவரும் மேட்டூர் கெமிகல்ஸ் லிமிடெட் போன்ற நிறுவனங்களுடன் ஆலோசனை நடத்தியதுண்டா? வட நாட்டு ஆதிபத்தியக்காரர்களுக்கு ஆதரவு தரும் முறையில் தென்னாடு முழுமையிலும் அவர்களுக்கு இடம் அளிப்பதும், அதற்கு சர்க்காரே ஆதரவு தந்து ஒத்துழைப்புத் தருவதாகவும் இருக்கும் நிலை காண வருந்துகிறேன்,"

—என்று, சென்னை சட்டசபையில் எதிர்க் கட்சித் தலைவர் தோழர் இராமமூர்த்தி குறிப்பிட்டிருக்கிறார்.

### நிதி அமைச்சர் கூற்று

தோழர் இராமமூர்த்தியின் கேள்விகளுக்கு நிதி அமைச்சர் பதில் அளிக்கையில், அந்தத் தொழிற்சாலை நிறுவுவதற்கு லைசென்ஸ் வழங்குவது சம்பந்தமான முக்கிய பொறுப்புக்கள் எல்லாம் மத்திய சர்க்காரையேதான் சார்ந்துவிட்டன என்றும், வடநாட்டு நிறுவனத்திற்கு லைசென்ஸ் கொடுப்பதற்கு முன்னர், மாநில, மத்திய தொழில் அமைச்சர்கள் இருவரும் இங்குள்ள சில முக்கியமான தொழிலதிபர்களுடன் கலந்தாலோசித்தனர் என்றும், ஆனால், அத்தொழிற்சாலை நிறுவுவதற்கு அவர்களில் எவருமே முன்வரத் தயாராக இல்லை என்று கண்டறிந்த பின்னர்தான், வடநாட்டு நிறுவனத்திடம் அது ஒப்படைக்கப்பட்டது என்றும் அவர் கூறியிருக்கிறார்.

★

# தென்னாட்டு நிறுவனத்திற்கு அனுமதி மறுக்கப்பட்டது ஏன்?

## 'வட நாட்டு நிறுவனத்திற்கு சென்னை சர்க்கார் 'சலுகை'கள் வழங்குவானேன்?'

### சென்னை சட்ட சபையில் உறுப்பினர் கேள்வி

*'தொழில் நுணுக்க பயிற்சி பெற்றோர்' கிடைக்கவில்லை என நிதி அமைச்சர் மழுப்பல்*

"சென்னை மாநிலத்தில் திருநெல்வேலி மாவட்டத்தில் ஒரு காஸ்டிக் சோடா தொழிற்சாலை நிறுவுவதற்காக மனுச் செய்து கொண்ட தென் இந்திய தொழில் நிறுவனம் ஒன்றுக்கு அனுமதி மறுக்கப்பட்டு, வடநாட்டைச் சேர்ந்த மற்றொரு நிறுவனத்திற்கு அனுமதி வழங்கப்பட்டிருக்கிறதுடன், இச்சபை உறுப்பினர்கள் தந்த ஆதரவையும் புறக்கணித்துவிட்டு, வடநாட்டவருக்கு அனுமதி அளித்ததுமல்லாமல், அதற்குச் சர்க்கார் பண உதவியும், மற்ற உதவிகளும் செய்திருக்கிறது; இதற்குக் காரணமென்னவென்று கேட்கிறேன். தென்னிந்தியர் ஒருவரின் கோரிக்கையை நிராகரித்த இது போன்ற நிலை மிகவும் வருந்தற்குரியது; இனிமேலாயிலும் சர்க்கார் இயன்ற அளவு, தென்னாட்டு நிறுவனங்களுக்கு அதிக ஆதரவு அளிக்கவேண்டும்,"

—என்று, சென்னை சபையில், சுயேச்சை உறுப்பினர் வி. பாலகிருஷ்ணன் 1955-56-ம் ஆண்டிற்கான அபிவிருத்தி வேலைகளுக்கான செலவுகளுக்கு நிதி ஒதுக்குவது குறித்த விவாதத்தின்போது பேசுகையில் குறிப்பிட்டிருக்கிறார்.

### நிதி மந்திரியின் மழுப்பல்!

திருநெல்வேலியில் ஒரு சோடா தொழிற்சாலை நிறுவுவது பற்றிய உறுப்பினரின் கோரிக்கை மீது அமைச்சர் சுப்பிரமணியம் பேசுகையில் கூறியதாவது:—

"நிறுவப்பட உத்தேசிக்கப்பட்டிருந்த இரண்டு சோடா தொழிற்சாலைகளில் ஒன்றை தென்னாட்டிலும், மற்றொன்றை வடநாட்டிலும் நிறுவவேண்டுமென்பதுதான் சர்க்காரின் கருத்தாக இருந்தது. முதன் முதலில் இங்கு தொழிற்சாலையை நிறுவுவதற்கு தென்னாட்டைச் சேர்ந்த நிறுவனத்திற்குத்தான் அனுமதி வழங்கப்பட்டது. ஆனால், பின்னர் அந்நிறுவனத்தில் தேவையான தகுதியுடைய தொழில் நுணுக்கப் பயிற்சி பெற்றோர் இல்லையென தெரியவந்ததும்தான், அதற்குக் கொடுக்கப்பட்ட அனுமதி திரும்பப் பெறப்பட்டு வடநாட்டு நிறுவனத்திற்கு அனுமதி தரப்பட்டது; எனினும், அந்த ஆலை நிர்வாகக் குழுவில், சர்க்கார் பிரதிநிதி ஒருவரும் இடம் பெறுவார்."

5,000 தொழிலாளர்களுக்கு வேலை தரக்கூடிய இத்தொழிற்சாலையுடன், மற்றும், 5,000 பேருக்கு வேலை தரும் 4, 5 சிறு தொழிற்சாலைகளும் ஏற்படுத்தப்படுமென்றும், அவற்றுள் ஒன்று, தற்போது வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படுகிற 'பிளாஸ்டிக் பவுடர்' தயார் செய்யும் தொழிற்சாலையாக்கப்படும் என்றும், தென்னாட்டின் தொழில் அபிவிருத்தியில் சர்க்கார் விசேட கவனம் செலுத்திவருகின்றனர் என்றும் குறிப்பிட்டிருக்கிறார்.

### 25 பேர் கைது!

ரீவா, நவ. 24—

விந்தியப் பிரதேசத்தை மத்திய பிரதேசத்துடன் சேர்க்க வேண்டுமென்ற மாநிலக் குழுவினரின் சிபாரிசுகளை எதிர்த்து நேற்று இங்கு நடைபெற்ற சம்பவங்களைத் தொடர்ந்து 25 பேர் கைது செய்யப்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

## சென்னைக்கு திட்டக் குழுவின் மறுப்பு

### மேலும் ஒரு மருத்துவகல்லூரி அவசியமில்லையாம்!

### அவசியமென சென்னை சர்க்கார் வற்புறுத்துகிறதாம்!

சென்னைக்கு மேலும் ஒரு மருத்துவக் கல்லூரி அவசியமில்லை என்று திட்டக் குழு கருதுவதாகவும், ஆனால் அவசியமென சென்னை சர்க்கார் வற்புறுத்தி வருவதாகவும் சென்னை சட்ட சபையில் சுகாதார அமைச்சர் தெரிவித்துள்ளார்.

'புதிய வைத்தியக் கல்லூரி தஞ்சையில் நிறுவப்படுமா?' என்று கேட்கப்பட்ட போது, எங்கு அதிகமான வசதி கிடைக்கிறதோ அங்கு அக்கல்லூரி ஏற்படும் என்று சுகாதார அமைச்சர் குறிப்பிட்டார்.

# ஆச்சாரியார் பாதையில் முதலமைச்சர் காமராசர்

## எங்கிருந்தும், எவரிடமிருந்தும் யோசனை பெற சர்க்கார் முன்வராதாம்!

சென்னை, நவ. 26—

"சென்னை பி. அண்ட் சி. ஆலைத் தொழிலாளர்களின் வேலை நிறுத்தத்தில் வெற்றி கிடைத்தது என்று குறிப்பிடப்படுகிறது; ஆனால், தங்கள் தகராறுகளை விசாரிக்க யார் நடுநிலையாளர் என்பதிலேயே நிலையான உடன்பாடு ஏற்படாமல், ஒரு நாள் மட்டுமே நடைபெற்ற இந்த வேலைநிறுத்தம், எப்படி வெற்றியுடன் கூடிய ஒன்றாக அமைந்தது என்பதை என்னால் புரிந்துகொள்ளமுடியவில்லை.

"தங்களிடையேயுள்ள தகராறுகளை விசாரிக்க இருக்கும் டிரிபியூனலில் அங்கம் வகிப்பவர்களைப் பொறுக்கும்போது, அதற்கு யார் தலைவராக இருக்க வேண்டுமென்ற தங்கள் கருத்தை வெளியிட ஆலை நிர்வாகிகளுக்கோ அல்லது தொழிலாளர்களுக்கோ இடமில்லை. இதனை ஒப்புக்கொள்ள மறுத்துத் தொழிலாளர்கள் தொடர்ந்து வேலைநிறுத்தத்தில் ஈடுபட்டால், அவர்கள் நல்ல ஒரு நடவடிக்கையை மேற்கொண்டுள்ளனர் என்று கூறுவதற்கியலாது."

(தொடர்ச்சி 4-ம் பக்கம் பார்க்க)

## ஆலை தொழிலாளர் தகராறு

*தொழிலாளர்—நிர்வாகிகள் உடன்பாடு நிராகரிப்பு?*

"சென்னை பக்கிங்காம் அண்டு கர்நாடிக் ஆலை நிர்வாகிகளுக்கும்—தொழிலாளர்களுக்கு மிடையே எழுந்துள்ள தொழில் தகராறுகள் தொழில் நீதிமன்றத்தின் விசாரணைக்காக விடப்பட வேண்டும்" என்று சென்னை சர்க்கார் உத்திரவு ஒன்று கூறுகிறது.

ஆலை நிர்வாகிகளும் — தொழிலாளர்களும், தங்களுக்கிடையே ஏற்பட்ட தொழில் தகராறுகளை ஒரு உயர்நீதி மன்ற நீதிபதியை நடுநிலையாளராகக் கொண்டு

(4-ம் பக்கம் பார்க்க)

Best copy available.

# நம் நாடு

தி.மு.க.தின இதழ் — ஆசிரியர் இரா.நெடுஞ்செழியன்

சென்னை 26—11—'55 சனி


## என்ன செய்யப்போகிறது?

பாகாண புனரமைப்புக் குழுவின் சிபாரிசு கடந்த நான்கு நாட்களாக சென்னை சட்டசபையினுல் நுணுகி ஆராயப்பட்டிருக்கிறது. பெரும்பாலும் உறுப்பினர்கள் அனைவருமே விவாதத்தில் கலந்துகொண்டுள்ளனர்.

நான்கு நாள் விவாதத்திலும் கலந்துகொண்ட மலையாள உறுப்பினர்கள், எதிர்காலத்தில் தமிழ் நாடு நல்ல முறையில் உருவாகி வளத்துடன் வாழவேண்டும் என்பதில் நல்லெண்ணத்தைக் காட்டுவதைக் காட்டிலும், ஏற்பட இருக்கும் புதிய கேரளத்தின் நலன்களைப் பாதுகாப்பதிலேயே அதிக கண்ணும் கருத்துமாக இருந்து வந்திருக்கிருர்கள். அவர்கள் பேச்சு இந்தக் கருத்தைத்தான் உருவாக்கி இருக்கிறது.

மலையாள உறுப்பினர்களைப் போலல்லாமல், கன்னட உறுப்பினர்கள் தமிழர்களின் அபிலாஷைகளுக்கு நல்லாதரவு காட்டி இருக்கிருர்கள். தீர்மான உருவில் கொண்டுவரப்பட்ட தமிழர்களின் கோரிக்கைகளுக்கு, கன்னட உறுப்பினர்கள் வாக்களித்து பக்கபலமாக இருந்தும் இருக்கிருர்கள்.

ஆனுல் பொதுவுடைமைக் கட்சியினரோ, மீனுக்குத் தலையும், பாம்புக்கு வாலும் காட்டும் விலாங்கு போலவே, ஒருங்கே தமிழர்களுடையவும், மலையாளிகளுடையவும் கசப்புக்கு ஆளாகாமல் தங்கள் கட்சியைப் பாதுகாத்துக் கொள்வதிலேயே அதிகமான அக்கரை காட்டியுள்ளார்கள். தமிழர்களுடைய எதிர்கால நலன்களைக் காக்கவேண்டுமே என்பதில் அவர்களுக்கு அறவே கருத்தில்லை என எவராவது குற்றஞ்சாட்ட முன்வரின், அக்குற்றச்சாட்டிற்கு ஆதாரமில்லை என ஒருக்காலும் அவர்களாலும் தள்ளிவிட முடியாது. எனவே, அக்கட்சியினரைக் குறித்துத் தமிழர்கள் கொண்டுள்ள சந்தேகப் பார்வை மேலும் விரிவடையுமானுல், அதில் வியப்பு ஒன்றும் இல்லை.

மொழிவழி மாநில அமைப்பை, அவசியமிருந்தாலும் இல்லாமற்போனுலும், வாய்ப்பு ஏற்பட்டாலும் ஏற்படாமல்போனுலும், ஒவ்வொரு தருணத்திலும பன்னிப் பன்னி வலியுறுத்திவந்தவர்கள் பொதுவுடைமைக் கட்சியினரே யாவர். மொழிவழி கோட்பாட்டின் மூலகர்த்தாக்களான காங்கிரஸ் கட்சியினரும் வெட்கித் தலைகுனியும் அளவிற்கு பொதுவுடைமைக் கட்சியினர், அது பற்றிப் பேசிவந்திருக்கின்றனர். அதுவுமன்றி, மற்ற அரசியல் கட்சிகளை கேலி செய்வதற்கும் தூற்றுவதற்கும், மொழிவழி கோரிக்கையை பொதுவுடைமைக் கட்சியினர் சிறந்த ஆயுதமாகக் கையாண்டும் வந்துள்ளனர். ஆனுல், மொழிவழி மாநிலத்தை ஒழுங்காக ஏற்படுத்துவதில், தங்களுக்குள்ளதாக பறைசாற்றி வரப்பட்ட நம்பிக்கையையும் பற்றையும் வெளிப்படையாக மெய்ப்பிப்பதற்கான தருணத்தில், அக்கட்சியினர் சட்டசபையில் பேசாமடந்தைகளாகப் போனது தமிழர்களுக்கு ஒரு படிப்பினையாக அமையும் என்பதில் ஐயமில்லை.

திரு-கொச்சியில் தமிழர்கள் பெரும்பான்மையாக உள்ள ஐந்து தாலுகாக்களை சென்னையுடன் இணைக்கவேண்டும் என்று சிபாரிசு செய்த பசில் அலிக் குழு, தமிழர்களையே பெரும் எண்ணிக்கையினராகக் கொண்ட தேவிகுளம் பீர்மேடு தாலுகாக்களையும் சென்னையுடன் இணைக்க வேண்டுமென்று அறுதியிட்டுக் கூறி இருக்கவேண்டும். ஆனுல் அக்குழுவோ, அந்த இரு தாலுகாக்களையும் திரு-கொச்சியுடனேயே இருக்க வேண்டுமென சிபாரிசு செய்துவிட்டது.

ஆனுல் சென்னை அரசாங்கம், பசில் அலிக் குழுவின் தவருன முடிவை மண்டியிட்டு ஏற்றுக் கொள்ளாமல், தமிழர்களைப் பெருந் தொகையினராகக் கொண்ட தேவிகுளம், பீர்மேடு ஆகிய இரு தாலுகாக்களும் சென்னையுடன் இணைய வேண்டியதற்கான முயற்சியை பெரும் அக்கரையுடன் மேற்கொண்டது வரவேற்கத்தக்கதேயாகும்.

'அந்த ஊர்வேண்டும்! இந்த ஊர்வேண்டும்! எனப் பேசுவதுகூடாது! ஊர்கள் அனைத்தும் இந்தியாவில்தான் இருக்கப்போகின்றன!' எனக் கூறிவரும் கனம் காமராசரைக் கொண்ட அரசாங்கம், தேவிகுளம்—பீர்மேடு எதிர்காலம் பற்றித் திட்டவட்டமான ஒரு முடிவை மேற்கொள்ளுவது என்ருல், அதுகண்டு எவர்தான் ஆச்சரியப்படாமல் இருக்க முடியும்?

தேவிகுளம்—பீர்மேடு எதிர்காலத்தில் தமிழ் நாட்டுடன் இணைவதா அல்லது கேரளத்துடன் இணைவதா என்பதை நிச்சயிப்பதற்கு மக்களாட்சி முறையில் ஒரே ஒரு வழிதான் உண்டு. அதன்படி, ஒரு முறைக்குமேல் தமிழர்களையே திரு-கொச்சி சட்ட சபை பிரதிநிதிகளாக தேவிகுளம்—பீர்மேடு தேர்ந்தெடுத்து இருக்கிறது. இச்சான்று ஒன்றே போதும் அந்த இரு தாலுகாக்களும் புதிய தமிழகத்துடன் இணைத்துக் கொள்ளப்பட வேண்டுமென்பதற்கு. வழக்கம்போல் இல்லாமல் தீர்மானத்தைக் கொண்டுவந்த நிதி அமைச்சர் சுப்பிரமணியம், தமிழர்களின் எதிர்கால நலன்களைக் காப்பதில் அதிகப்படியான ஆர்வத்தைக் காட்டியுள்ளார். தமிழர் கோரிக்கையில் புதைந்துகிடக்கும் நியாயத்தை தக்கப் புள்ளி விவரங்களுடன் எடுத்துக்காட்டி மெய்ப்பித்தும் உள்ளார் அமைச்சர். தமிழர்களுக்குத் தாம் அமைச்சர்களாக இருந்து ஆற்ற வேண்டிய கடமையை, அவர் சிற்சில முறைகளில் தவருக ஆற்றி இருந்தபோதிலுங்கூட, இந்த ஒரு முறையாவது தக்க வகையில் ஆற்றத் துணிந்ததற்காகத் தமிழர்கள் அவரைப் பாராட்ட தவறமாட்டார்கள். அதுவுமன்றி, அமைச்சர் புரிந்துள்ள பழைய குற்றங்களைக்கூட, ஓரளவுக்கு தமிழர்கள் மன்னிக்கவும் துணிவார்கள்.

சென்னை மாநிலம் எதிர்காலத்தில் எவ்வாறு உருவாக்கப்பட வேண்டும் என்பதை சென்னை அரசாங்கம் ஐயத்திற்கிடமின்றி அறிவித்துவிட்டது; சட்டசபையின் பரிபூரண ஆதரவும் அவ்வேற்பாட்டிற்குக் கிடைத்தும்விட்டது.

சென்னை சட்ட சபை முடிவை டில்லி ஆதிக்கம்தான் இனி செயலாற்ற வேண்டும். டில்லி என்ன செய்யப்போகிறது என்பது இனிதான் தெரிந்தாக வேண்டும்.

## திராவிடத்தின் மணல் சிறப்புற்றதாம்!

பல்வேறு மாநில ஆராய்ச்சி நிலையங்களுக்கு அனுப்பப்படுமாம்!

டில்லி நிறுவனம் முடிவுக்கு சென்னை சர்க்கார் ஒப்புதல்?

'சிமெண்டையும், காங்கிரீட்டையும் பரிசோதிக்க, சென்னைக்கு அருகேயுள்ள என்னூர் பகுதியில் காணப்படும் விசேட மணல்தான் நல்ல தரமுள்ளது—உபயோககரமானது,"

என்று, டில்லியிலுள்ள இந்திய 'தர நிர்ணய நிறுவனம்' முடிவு செய்துள்ளதாம்.

பரிசோதனை வேலைக்கு என்னூர் மணலையே உபயோகிப்பதெனவும் முடிவு செய்யப்பட்டிருக்கிறது.

இதனுல், என்னூர் அருகே 150 ஏகர் நிலப் பகுதியை வாங்கி மணலைத் திரட்டி சுத்தப்படுத்துவதற்கான திட்டத்துக்கு சென்னை சர்க்கார் அங்கீகாரம் அளித்துள்ளது.

சுத்தம் செய்யப்பட்ட இம்மணல் பல்வேறு ஆராய்ச்சி நிலையங்களுக்கு அனுப்பப்படும்.

இந்தத் திட்டத்துக்கான ஆரம்பச் செலவு ரூ. 3 06,500. ஆண்டுதோறும் நடப்பு செலவு ரூ 14,010.

ஆண்டு ஒன்றுக்கு நிகரலாபம் ரூ. 98,400 கிடைக்கும் என்றும் மதிப்பிடப்பட்டிருக்கிறதாம்.

## இரவில் பணியாற்றும் 'நர்சு'கள் நிலைமை

அமைச்சர் தரும் விளக்கம்

சென்னை, நவ. 25—

சர்க்கார் ஆஸ்பத்திரிகளில் இரவு 'டியூடி' (வேலை) செய்யும் நர்சுகளுக்கு அதிகப்படியாக அலவன்ஸ் (-டி) தரப்படுவதில்லை என்றும், பெண் நர்சுகள் இரவு 'வேலை'யை நன்ருகச் செய்கிருர்கள் என்றும், சட்டசபையில் சுகாதார அமைச்சர் கேள்வி ஒன்றுக்குப் பதிலளிக்கையில் குறிப்பிட்டார்.

இரவு வேலை கஷ்டமான தாகையால், அதிகப்படியாக 'அலவன்ஸ்' தருவதுபற்றி யோசிக்கப்படுமா என்று கேட்கப்பட்டபோது இரவில் 'டியூடி' மாற்றி மாற்றி செய்யப்படுகிறது என்று அமைச்சர் கூறினுர்.

வர்த்தக வரி அதிகாரிகளுக்கு

## சர்க்கார் உத்தரவு

சட்ட சபையில் மந்திரி அறிவிப்பு

சென்னை, நவ. 23—

"வர்த்தக வரி செலுத்துவோரின் மோட்டார்களில் வர்த்தக வரி அதிகாரிகள் போகக் கூடாதென்று தெளிவான உத்தரவைச் சர்க்கார் பிறப்பிக்குமா?" என்று சட்ட சபையில் கேட்கப்பட்ட கேள்விக்கு அமைச்சர் மாணிக்கவேலர் பதிலளிக்கையில், முன்னமேயே இதுபோன்ற உத்தரவு ஒன்று பிறப்பிக்கப்பட்டுள்ளதென்றும், இதுவரை யாரும் தண்டிக்கப்படாதது, உத்தரவு மீறப்படாததையே காட்டுகிறது என்றும் குறிப்பிட்டார்.

## பாலாறு நீர்ப்பாசனத் திட்டங்கள்

### பரிசீலனை செய்தபின் ஏற்பட்டுள்ள நிலை பற்றி மராமத்து அமைச்சர்

பல பகுதிகள் ஆந்திராவுக்குச் சென்றுவிட்டனவாம்!

சென்னை, நவ. 25—

வட ஆற்காடு, செங்கல்பட்டு மாவட்டங்களில் பரிசீலனை செய்யப்பட்ட அல்லது பரிசீலனையிலிருக்கும் பாலாறு நீர்ப்பாசனத் திட்டங்கள் பற்றிய விவரத்தை மராமத்து அமைச்சர் சென்னை மேல்(சட்ட)சபையில் விளக்கிக் கூறினுர்.

1. சென்னை—திருச்சி பாதையில், கற்பாலத்திற்கு முன்னுல் ஒரு அணை கட்டி, கொளவாய் ஏரிக்குத் தண்ணீர்விட ஏற்பாடு.

2. சித்தூர் மாவட்டம் கக்கண்டி ஜமீன் பிரதேசத்தில் குப்பத்தில் நீர்த் தேக்கம் கட்டி அதில் 4,500 கன அடி தண்ணீர்த் தேக்க ஏற்பாடு செய்தல்.

3. வடஆற்காடு மாவட்டம் திருப்பத்தூர் தாலுகாவில் அவரிக்குப்பம் அருகே நீர்த் தேக்கம் கட்டும் திட்டம்.

4. பாலாற்றின் குறுக்கே ஒரு அணை கட்டி, செம்பரம்பாக்கம் ஏரிக்குத் தண்ணீர் விநியோகக் கால்வாய் கட்டுவது.

5. பாலாறு அணைக்கட்டிற்கு சிறிது முன்னுல் ஒரு தடுப்புச் சுவர் அமைத்தல்.

செங்கற்பட்டு மாவட்ட கலெக்டர் வேண்டுகோளின்படி பிரதம எஞ்சினியர் பரிசீலனை செய்தபின், கொளவாய் ஏரியின் படுகை, பாலாற்றுப் படுகையைவிட உயர்ந்து இருப்பதால், முதல் திட்டம் கைவிடப்பட்டது.

இரண்டாவது, மூன்ருவது திட்டங்களினுல் 80 மைலுக்கும் கீழ்ப்புறத்தில் இரண்டாவது போக நெல் விளைச்சலுக்கு நீர்ப்பாசன வசதி ஏற்படும் என்றும், இதற்கு ரூ. 262 இலட்சம் செலவாகும் என்றும் ஆந்திரப் பிரிவினைக்கு முன் திட்டமிடப்பட்டது என்றும், நீர்த்தேக்கம் கட்ட உத்தேசித்த இடமும், நீர்ப்பரப்புப் பகுதியும் ஆந்திர மாநிலத்திற்குச் சென்றுவிட்டதால், திருப்பத்தூர் தாலுகா அவரிக்குப்பத்தில் இதற்குப் பதிலாக ஒரு திட்டம் பரிசீலிக்கப்பட்டது என்றும், இதிலும் நீர்ப்பரப்புப் பகுதியும் ஆந்திர மாநிலத்தில் இருப்பதாகத் தெரியவந்தது என்றும், செலவு ரூ. 397 இலட்சம் ஆகும் என்றும், இரண்டாவது போக சாகுபடி 3,500 ஏக்கரில்தான் நடைபெறும் என்றும் தெரியவந்தபடியால் சென்னை—ஆந்திர மாநிலங்களிடையே எல்லை நிர்ணயிக்கப்பட்டபின் இதைப் பரிசீலனை செய்யச் சர்க்கார் உத்தரவிட்டுள்ளனர் என்றும் கூறினுர்.

நான்காவது திட்டமான செம்பரப்பாக்கம் ஏரிக்கு தண்ணீர் விநியோகம் செய்து, 25 சதவிகிதம் அதிக நீர்ப்பிடிப்பை அதிகரிக்கச் செய்ய ஒரு நீர் விநியோகக் கால்வாய் கட்டுவது பற்றி பரிசீலனை செய்யப்படுகிறது.

ஐந்தாவது திட்டம் பற்றி அங்குள்ள அதிகாரிகள் பரிசீலனை செய்து வருகிருர்கள்.

## திட்ட அளவைக் குறைக்கவேண்டுமாம்!

மத்திய சர்க்கார் கோரிக்கை

சென்னை, நவ. 23—

"மாநிலங்களின் இரண்டாவது திட்ட அளவைக் குறைக்கவேண்டுமென்று மத்திய சர்க்கார் தெரிவித்துள்ளனர்; ஆனுல் இப்பிரச்சினையில் முடிவொன்றும் செய்யவில்லை," என்று கேள்வி ஒன்றுக்குப் பதிலளிக்கையில், நிதி மந்திரி சி. சுப்பிரமணியம் தெரிவித்தார்.

## 'பாதிக்கப்படுவோர்'

'பிழைப்பு'க்கு வழி என்ன?

பிரசினை பரிசீலனையிலிருக்கிறதாம்

"நகரில் ரிக்ஷாக்கள், சைக்கிள் ரிக்ஷாக்கள் கட்டை வண்டிகள் ஆகியவற்றை ஒழிப்பதனுல், அத்தொழிலில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு வேறு தொழிலுக்கு வழிவகை செய்து தருவதை சர்க்கார் கவனிக்குமா?" என்று, சட்டசபையில் கேட்கப்பட்டபோது, அமைச்சர் பரமேசுவரன் சொன்னுர்:—

"அவர்களுக்கு வேறு வேலை வாங்கித் தருவது பெரும் பிரச்சினையாக இருப்பதால், இந்தப் பிரச்சினை முழுவதும் அரசாங்கத்தின் பரிசீலனையில் இருந்துவருகிறது."

கே:—"டிராம்வே தொழிலாளர்களுக்கு வேலை தேடித் தந்தது போல்தான் சர்க்கார் இதையும் கவனிக்கப்போகிறதா?"

அமைச்சர்:—"டிராம்வே தொழிலாளர்களுக்கு அநேகமாக வேலை கிடைக்கச் செய்யப்பட்டிருக்கிறது என்பது, உறுப்பினருக்குத் தெரியாதது வருந்தத் தக்கதுதான்."

## பாழாகும் நீரை பயன்படுத்தும் திட்டம்

திட்டக் குழுவிற்கு சென்னை சர்க்கார் கோரிக்கை

திரு—கொச்சி நிலைமை என்ன?

திரு — கொச்சி மாநிலத்தில் வீணுகும் தண்ணீரை கோவை மாவட்டத்திற்குப் பயன்படுத்த பரம்பைக்குளம் ஆறு திட்டம்பற்றி திட்டக் குழுவுக்கு எழுதப்பட்டிருப்பதாயும், பதில் எதிர்பார்க்கப்படுவதாயும், இத்திட்டம் இறுதியாக உருவாகவில்லை என்றும், இத்திட்டத்துக்கு ரூ. 20 கோடி செலவாகும் என்றும் மராமத்து அமைச்சர் சட்ட சபையில் தெரிவித்துள்ளார்.

அம்மாநிலத்தின் தண்ணீர் வீணுகப் போவதாகவே சென்னை சர்க்கார் கருதுவதாயும், உபரி நீர் இல்லை என்று நிரூபிப்பது திருவாங்கூர் சர்க்கார் பொறுப்பு என்றும், இந்தப் பிரச்சினை திட்டக் குழுவின் பரிசீலனைக்கு விடப்பட்டுள்ளதென்றும், நமது கோரிக்கை நிறைவேறுவது திட்டக் குழுவின் முடிவைப் பொறுத்தது என்றும், ஆற்று நீர் பற்றி மத்திய சர்க்கார் சட்டம் நிறைவேற்றும்போது நமக்கு ஆவன செய்யப்படும் என்று நம்புவதாயும் அமைச்சர் விளக்கினுர்.

## மங்கலம் நீர்த் தேக்கத் திட்டம்

திரு — கொச்சி சர்க்காரும் பங்கு பெற முடிவு

சென்னை, நவ. 24—

சென்னை சர்க்காரின் மங்கலம் நீர்த்தேக்கத் திட்டத்தில் பங்கு பெறுவதற்கு திரு-கொச்சி சர்க்கார் இணங்கியுள்ளதெனத் தெரிகிறது.

மீண்டும் பரிசீலனை செய்யப்பட்ட இந்தத் திட்டத்திற்கு ரூ. 88,66,000 செலவாகுமென மதிப்பிடப்பட்டுள்ளது.

மங்கலம் நதியின் உப-நதியான செருக்குன்னபுழையின் குறுக்கே வடக்கன்சேரி கிராமத்தில் இந்த நீர்த்தேக்கம் கட்டப்பட இருக்கிறது. இதன் இருபுறங்களிலும் கால்வாய்கள் அமைக்கப்படும்.

இடதுபுற கால்வாய் 4,000 ஏக்கர் நிலத்திற்கும், வலதுபுற கால்வாய் 2,000 ஏக்கர் நிலத்திற்கும் நீர்ப்பாசன வசதி அளிக்கும்.

இதில் சென்னை சர்க்காருக்கு ரூ 71,38,000-மும், திரு-கொச்சி சர்க்காருக்கு ரூ. 17,27,000-மும் செலவு ஏற்படும்.

One side of the page is dark



## ஏழைத் தொழிலாளர் குடியிருப்பு வசதிகள்

அபிவிருத்தி செய்ய சென்னை சர்க்கார் நிதி உதவுகிறது

சென்னை, நவ. 25—

சென்னை நகரில், நகரசபையால் கட்டப்பட்டுள்ள ஏழைத் தொழிலாளர் குடியிருப்பு விடுதிகளை அபிவிருத்தி செய்வதற்கும், மாற்றியமைப்பதற்கும் சர்க்கார், ரூ. 1-இலட்சம் நகரசபைக்கு அளித்துள்ளது. இப்பணத்தைக் கொண்டு அவ்விடுதிகளில் வசதிகள் செய்து கொடுக்கப்படும்.

நகரில், இதுவரை, நகரசபை ஏழைத் தொழிலாளர்களுக்கு 2,000 விடுதிகளைக் கட்டிக் கொடுத்திருக்கிறது. இவற்றில் 500 விடுதிகளில் நகரசபைத் தொழிலாளர்கள் இருக்கிருர்கள்; மற்ற விடுதிகள், மிகக் குறைந்த வருவாய் உள்ள ஏழைகளுக்கு வாடகைக்கு விடப்பட்டுள்ளன.

## புதிய மாநிலங்கள் அமைப்பு பற்றி பந்த்!

புதுடில்லி, நவ. 23—

"கலாச்சாரம், சிறுபான்மையினர் துறைகளில் பாதுகாப்பு சம்பந்தமாக மாநிலப் புனரமைப்புக் குழுவினர் செய்துள்ள சிபாரிசுகளை இந்திய சர்க்கார் வெகு கவனமாகப் பரிசீலிக்கிறது," என்று மக்கள் சபையில், உள்நாட்டமைச்சர் பண்டித பந்த் கேள்வி நேரத்தின்போது குறிப்பிட்டிருக்கிருர்.

நாட்டிலுள்ள ஒவ்வொரு குடிமகனுடையவும், வகுப்பினருடையவும் பாதுகாப்பிற்குத் தேவையான எல்லா தீவிர நடவடிக்கைகளையும் அமுலுக்குக் கொண்டுவர சர்க்கார் விரும்புகிறது என்றும் குறிப்பிட்டிருக்கிருர்.

இந்நடவடிக்கைகளை மேற்கொள்வதற்கான திட்டங்கள் வகுக்கப்பட்டு, பாராளுமன்றத்தின் ஒப்புதலுக்காக வைக்கப்பட இருக்கிறது என்றும், மாநிலங்களைப் புனரமைப்பதற்கான சட்டம், பெரும்பாலும் வருகிற ஆண்டு மே திங்களில் பாராளுமன்றத்தில் நிறைவேற்றப்படக்கூடும் என்றும், அப்படி நிறைவேற்றப்படுமானுல், அடுத்த ஆண்டு அக்டோபர் திங்கள் 7-ந் தேதியோ அல்லது அதனை ஒட்டிய மற்ற நாட்களிலோ, புதிய மாநில 'யூனிட்டு'க்கள் அமைக்கப்படலாம் என்றும் அவர் கூறியிருக்கிருர்.

## 3,000 மைலுக்கு புதிய இரயில் பாதைகள்

பாட்ன, நவ. 23—

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில், 3,000 மைல் நீளத்திற்குப் புதிதாக இரயில்பாதைகள் போடுவதும், 1,000 மைல் தொலைவுக்கு இரட்டை இருப்புப் பாதைகள் அமைப்பதும்தான் இரயில்வே குழுவின் திட்டம் என்று, மத்திய சர்க்கார் இரயில்வே குழுத் தலைவரான ஜி. பாண்டே, பீகார் வர்த்தக சபையில் தெரிவித்திருக்கிருர்.

இரயில்வே இலாகாவின் திட்டங்கள் அனைத்தும் இன்னும் திட்டக் குழுவின் பரிசீலனையில்தான் இருந்து வருகிறது என்றும், திட்டத்தின் அளவு தெரிந்த பின்னர்தான் குறிப்பிட்ட வேலைத் திட்டங்கள் பொறுக்கியெடுத்து மேற்கொள்ளப்படும் என்றும், இந்தத் திட்டங்களையெல்லாம் அனுமதித்த மத்திய போக்குவரத்துக் குழுதான் இதற்கு முழுப் பொறுப்புடையதாகும் என்றும் அவர் தெரிவித்தார்.

மேலும் அவர், இந்திய இரயில்வேக்களில் உள்ள பெட்டிகளில் முதல் வகுப்புகளையும், 3-வது வகுப்புகளையும் மட்டுமே வைத்துக்கொள்வது என்பதுதான் சர்க்காரின் நோக்கம் என்றும் தெரிவித்திருக்கிருர்.

தலைமைக் கழகம்: அறிக்கை—31/55

## தி. மு. கழக உறுப்பினர் சேர்த்தல்

### 1955 டிசம்பர்—1956 சனவரி

ஆகிய இரண்டு திங்களும்

### உறுப்பினர் சேர்க்கும் காலமாகும்

(1) திராவிட முன்னேற்றக் கழகத்தின் பழைய உறுப்பினர்களைப் புதுப்பிப்பதற்கும், புதிய உறுப்பினர்களைச் சேர்ப்பதற்கும் உரிய காலமாக, 1955 டிசம்பர்—1956 சனவரி ஆகிய இரண்டு திங்கள்களும் தேர்ந்தெடுக்கப்படுகின்றன.

(2) இப்பொழுதுள்ள உறுப்பினர்கள் 1956 சனவரித் திங்கள் 31-ம் நாளுக்குள் தம் உறுப்பினர் தகுதியைப் புதுப்பித்துக் கொள்ளவேண்டும். அதற்குள் புதுப்பித்துக் கொள்ளாவிட்டால், 1956 பிப்ரவரி 1-ஆம் நாளிலிருந்து தி. மு. கழக உறுப்பினர் தகுதியை அத்தகையோர் இழந்துவிட்டதாகக் கருதப்படுவர். அதற்குப் பிறகு சேர்பவர்களுக்குப் பழைய உறுப்பினர் தகுதி சேர்த்துக் கணக்கிடப்படமாட்டாது; புதிய உறுப்பினர் என்றமுறையிலேயே நோக்கப்படுவர்.

(3) உறுப்பினரைப் பதிவு செய்யும் விண்ணப்பத் தாள்களை அந்தந்த மாவட்டக் கழகங்களிலிருந்து அந்தந்த மாவட்டத்தைச் சேர்ந்த கிளைகள் பெற்றுக்கொள்ள வேண்டும்.

(4) கிளைக் கழகம் தோற்றுவிக்கக்கூடிய, ஆனுல் இதுவரையில் தோற்றுவிக்காத இடத்தில் (சிற்றூர் அல்லது பேரூர் அல்லது நகரம்) முக்கியமான ஒருவர் பொறுப்பாளராக இருந்து விண்ணப்பத் தாளை மாவட்டச் செயலாளரிடமிருந்து பெற்று, உறுப்பினர்களைச் சேர்த்துத் தலைமைக் கழகத்திற்கு அனுப்பிவிட்டுப் பிறகு கிளைக் கழகம் அமைத்துக்கொள்ளலாம்.

(5) கிளைக் கழகம் அமைக்கக் குறைந்தது 25 உறுப்பினர்கள் வேண்டும். கிளைக் கழகம் அமைக்க முடியாத இடத்திலுள்ளவர்கள், பக்கத்திலுள்ள ஏதேனும் ஒரு கிளைக் கழகத்தில் உறுப்பினராகத் தம்மை இணைத்துக் கொள்ளலாம்.

(6) கிளைக் கழகச் செயலாளரும், கிளைக் கழகம் இல்லாத ஆனுல் அமைக்கக்கூடிய இடத்தில் முக்கிய பொறுப்பாளருந்தான் உறுப்பினர்களைப் பதிவு செய்ய வேண்டும்.

(7) ஒவ்வொரு விண்ணப்பத் தாளிலும் இருபத்தைந்து உறுப்பினர்களைப் பதிவு செய்யலாம். ஒவ்வொரு கிளைக் கழகமும் எவ்வளவு உறுப்பினரைத் தம் ஊரில் சேர்க்கமுடியும் என்று எண்ணுகிறதோ அவ்வளவு உறுப்பினருக்குத் தேவையான பதிவுத் தாள்களை மாவட்டக்கிளையிலிருந்து பெற்றுக் கொள்ளலாம்.

(8) ஒவ்வொரு உறுப்பினரும், உறுப்பினர் கட்டணமாக அணு 8 செலுத்த வேண்டும். ஒவ்வொரு உறுப்பினரும் செலுத்தும் எட்டு அணுவில் நான்கு அணுவைக் கிளைக் கழகம் வைத்துக்கொண்டு மீதி நான்கு அணுவை நேரே தலைமைக் கழகத்துக்கு அனுப்பிவைக்க வேண்டும். மாவட்டக் கிளைக்குச் சேரவேண்டிய தொகையைத் தலைமைக் கழகம் பிறகு கணக்குப் பார்த்து அந்தந்த மாவட்டக் கிளைகளுக்கு அனுப்பிவைக்கும்.

(9) உறுப்பினர் பதிவு செய்யப்பட்ட விண்ணப்பத் தாளையும், தலைமைக் கழகத்திற்குச் சேரவேண்டிய தொகையையும் (பாதிக் கட்டணத் தொகை) பொதுச்செயலாளர், தி. மு. கழகம், அறிவகம், இராயபுரம், சென்னை-13 என்ற முகவரிக்கு கிளைக் கழகச் செலவில் அப்படியே அனுப்பி வைக்க வேண்டும்.

(10) விண்ணப்பத் தாளும், கட்டணத் தொகையும் வந்து சேர்ந்தவுடன் உறுப்பினர் உரிமைச் சீட்டுக்கள் தலைமைக் கழகத்தால், கிளைக் கழகத்தின் மூலம் உறுப்பினருக்கு அனுப்பிவைக்கப்பெறும். உறுப்பினர் உரிமைச் சீட்டை, உறுப்பினர், சான்றுக்காக என்றென்றும் வைத்துக் காப்பாற்றி வைக்க வேண்டும்.

(11) கிளைக் கழகத்தில் வைத்துக் காப்பாற்றப்பட வேண்டிய சீட்டுக்களும், மாவட்டக் கழகத்தில் வைத்துக் காப்பாற்றப்பட வேண்டிய சீட்டுக்களும் அவ்வப்போது அனுப்பி வைக்கப்பெறும்.

(12) எந்தக் கிளைக் கழகத்திலும் தொடர்புகொள்ள விருப்பமில்லாமல் திராவிட முன்னேற்றக் கழகத்தின் உறுப்பினர் என்ற அளவிலேயே இருக்க விரும்புபவர்கள் தங்கள் பெயர், முகவரி, முன்பு உறுப்பினரா, அல்லவா என்ற விவரம் ஆகியவைகளைக் குறித்துக் கையெழுத்துப் போட்ட முடங்கலை எட்டு அணுவுடன் தலைமைக் கழகத்திற்கு அனுப்பிவைக்க வேண்டும். அத்தகையோருக்கு உறுப்பினர் உரிமைச் சீட்டு தலைமைக் கழகத்தால் அனுப்பி வைக்கப்பெறும்.

(13) பின்னுல் எப்பொழுதாவது ஒரு கிளைக் கழகத்திலிருந்து மற்றொரு கிளைக் கழகத்திற்குத் தக்க காரணங்களோடு தம்மை மாற்றிக்கொள்ள விரும்புபவர்கள், தனியே நான்கு அணுவைத் தலைமைக் கழகத்திற்குச் செலுத்தி மாற்றிக் கொள்ளவேண்டும்.

(14) எந்தக் கிளைக் கழகமும் புதிய தேர்தல் நடத்தக் கூடாது. உறுப்பினர் சேர்க்கும் பணி மட்டுந்தான் இப்பொழுது நடைபெற வேண்டும்.

(15) பதினெட்டு வயதிற்கு மேற்பட்ட ஆண்கள்—பெண்கள் மட்டுமே தி. மு. கழகத்தில் உறுப்பினராகும் தகுதியடைந்தவராவர். மாணவர்கள் தி. மு. கழகத்தில் உறுப்பினராக வேண்டாம். அவர்கள் திராவிட மாணவர் முன்னேற்றக் கழகத்தில் உறுப்பினராகப் பதிவு செய்து கொள்ள வேண்டும்.

"அறிவகம்,"
சென்னை—13
21-11-1955

இரா. நெடுஞ்செழியன்,
பொதுச்செயலாளர், தி. மு. கழகம்

## செஞ்சீனுவின் சாதனைகள்

### தாழ்வின்றிப் பெண்கள் பணியாற்றுகின்றனர்

மத்திய அமைச்சர் தரும் தகவல்

"சீன மக்களின் ஊக்கமும், உழைப்பும், கட்டுப்பாடும், ஒழுங்கும் பாராட்டப்படக் கூடியவை; இவர்களிடமிருந்து இப் படிப்பினைகளை நாம் கற்றுக்கொண்டால் நமது திட்டங்கள் விரைவில் நிறைவேறி, நமது இலட்சியங்களும் துரிதமாகக் கைகூடும்,"

என்று, மத்திய சர்க்கார் சுகாதார அமைச்சர் ராஜகுமாரி அமிருத கௌரி, அ. இ. வானெலியின் டில்லி நிலையத்திலிருந்து 'என் சீனப் பயணம்' என்ற தலைப்பில் பேசுகையில் குறிப்பிட்டுவிட்டு, மேலும் சொன்னுர்:—

ஆரோக்கியமான குழந்தைகள்

"சீனுவில் வறுமை இல்லாமலில்லை; அதிலும் வட சீனுவைவிட தென் சீனுவில் வறுமை நிலை அதிகமாகத் தென்படுகிறது. ஆனுல் நாடு 'விடுதலை' பெறுவதற்கு முன்னிருந்ததைவிட இப்பொழுது நிலைமை எவ்வளவோ மேல் என்று சொல்லப்படுகிறது. ஆனுல் போஷாக்கில்லாமை அல்லது போஷாக்குக் குறைவுக்கான அறிகுறிகள் ஏதும் காணப்படவில்லை. நம் நாட்டைப்போல் சீனுவில் குழந்தைகள் பால் அதிகமாகக் குடிப்பது கிடையாது; எனினும் சீனக் குழந்தைகள் 'புஷ்டி'யாகவும், வசீகரமான கன்னங்கள் கொண்டும், ஆரோக்கியத்துடனும், அழகுடனும் காணப்பட்டன. மக்கள், சமுத்திரத்திலிருந்தோ அல்லது ஆறுகள், ஏரிகளிலிருந்தோ மீன் கிடைக்கும்போது, அதனை உணவாக உண்ணுகிருர்கள். மாமிசஉணவு அவ்வளவாக யாவருக்கும் கிடைப்பதில்லை. சோயா பீன், சோயா பீன்பால், தயிர் ஆகியவை ஏராளமாக சீன மக்களால் அருந்தப்படுகிறது. எது பிடித்ததோ, எது விருப்பமோ அதை அவர்கள் சாப்பிடுகிருர்கள்; 'இது சாப்பிட்டால் பாவம்; அது சாப்பிடக் கூடாது' என்ற வைதீக முறைகள் ஏதும் அவர்களிடம் கிடையாது; இவர்கள் சில பானங்களை அருந்திய போதிலும் அதிகக் குடியை வெறுக்கிருர்கள்; குடிபோதையிலுள்ளவர் எவரையும் தெருவில் காண முடியாது.

திருமணம்

"ஒருதார மணச் சட்டம், விவாக வயதுச் சட்டம் ஆகியவை ஆட்சியாளராலும், மக்கள் சமூகநல நிறுவனங்களாலும் நன்கு அமுல் நடத்தப்படுகின்றன ஒவ்வொரு விவாகமும் பதிவு செய்யப்படுகிறது. மதச் சடங்குள்ள திருமணங்கள் மிக அபூர்வம்; இளைஞர்கள், இள நங்கையர்கள், தங்கள் விருப்பம்போல் திருமணம் செய்துகொள்ளலாம். சீன மாதர்கள் நர்ஸ், டாக்டர், ஆய்வுக்கூட சிப்பந்திகள், உபாத்தியாயர்கள், தேகப் பயிற்சி ஆசிரியர்கள் போன்ற பல தொழில்களிலும் ஈடுபட்டு வேலை செய்து வருகின்றனர். இவர்கள் எந்த உத்தியோகத்திலும் சேரலாம்; இவர்களிடையே சுதந்தர உணர்ச்சியும், மனோ வலிமையும் தென்பும் காணப்படுகிறது. ஒழுக்கமும், சீலமும் நன்கு காப்பாற்றப்பட்டு வருகின்றன. மாதர்கள் கற்பழிக்கப்படுவதோ, கேலி செய்யப்படுவதோ கிடையாது. சகல துறையிலும், பெண்கள், ஆடவர்களுடன் எவ்விதத் தாழ்வு உணர்வின்றி, சரி சமானமாகப் பழகி சேவை செய்து வருகிருர்கள்; எல்லா வயதிலும் ஆண்-பெண் இருபாலாரும் சேர்ந்தே கல்வி பயிலுகின்றனர். திருட்டு அநேகமாக இல்லை என்றே கூறலாம்.

"குழந்தைகள் பராமரிப்பில் விசேட கவனம் செலுத்தப்படுகிறது. பிரசவ, சிசு மரண விகிதம் குறைந்துகொண்டே வருகிறது. மருத்துவ விடுதிப் பள்ளிக் கூடங்கள், தொழிலாள மாதர் குழந்தைகள் பராமரிப்பு நிலையங்கள் சம்பந்தப்பட்டமட்டில் சீனர்கள் முன்னேற்றமடைந்திருக்கின்றனர். தொழிற்சாலைகளிலோ, பண்ணைகளிலோ வேலை செய்யும் தாய்மார்கள், வேலை நேரத்தில் தங்கள் இளஞ் சிசுக்கள் நன்கு கவனிக்கப்படுவர் என்று உறுதியுடன் கவலையற்று உழைக்கலாம்; இக்குழந்தைகளைக் கவனிப்பவர்களும் மாதர்களே. குழந்தைகள், யாவருடனும் வெகு அன்பாகப் பழகுகின்றன.

உடற் பயிற்சி

உடற் பயிற்சிக்கு விசேட கவனம் செலுத்தப்படுகிறது. இதற்காகப் பல நிலையங்கள், விளையாட்டுக் கூடங்கள் முதலியன உள்ளன. இதற்காக ஆண்கள், பெண்கள் இருபாலருக்கும் பயிற்சிகள் கொடுக்கப்படுகின்றன. இப்பிரச்சினையில் இந்தியா சீனுவைப் பின்பற்றி நடக்கலாம்

## இரயில்வேக்களில் இலஞ்ச ஊழல்

### ஒழிப்பதற்கு நடவடிக்கைகள் எடுக்கப்படுமாம்!

இரயில்வேக்களில் நடமாடும் இலஞ்சப் புழக்கத்தை ஒழிப்பதற்கு நடவடிக்கை எடுப்பதற்காகத் தனிப் பிரிவொன்றை ஏற்படுத்துவது குறித்து, மத்திய சர்க்கார் உள்நாட்டுத் துறை இலாகாவினருக்கும்—இரயில்வே இலாகாவினருக்குமிடையே ஆலோசனைகள் நடைபெற்று வருகின்றன என்று, இரயில்வே அமைச்சர் லால்பகதூர் சாஸ்திரி மக்கள் சபையில் கூறியிருக்கிருர்.

இலஞ்ச ஒழிப்புக் குழு, 'நாடு முழுமையிலும் — எல்லா பகுதி இரயில்வேக்களிலும் இலஞ்சப் புழக்கம் விரிந்து காணப்படுகிறது' என்று தெரிவித்திருப்பதைக் குறிப்பிட்டுப் பேசிய அமைச்சர், "எல்லாப் பகுதி இரயில்வேக்களிலும் சுற்றுப் பயணம் நடத்தியதால் குழுவினர் இந்தக் கருத்தைத் தெரிவிக்கின்றனர்; அவர்களே அப்படிக் கூறும்போது, நான் மட்டும், அதை ஒப்புக்கொள்வதற்கில்லை என்று எப்படிக் கூறுவது?" என்று குறிப்பிட்டிருக்கிருர்.

இரயில்வே உதவி அமைச்சர் ஓ.வி. அளகேசன், இந்தஇரயில்வே இலஞ்ச ஒழிப்பிற்கெனத் தனிப்பட்ட ஒரு அதிகாரி நியமிக்கப்படவேண்டும் என்றும், அவருக்குக் கீழ் சில அதிகாரிகளையும் நியமிக்கவேண்டும் என்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது என்றும் தெரிவித்திருக்கிருர்.

எச். வி. காமத் என்ற உறுப்பினர் கேள்வி ஒன்றுக்குப் பதிலளித்துப் பேசிய அமைச்சர் பி. என். தத்தார், உள்நாட்டு இலாகா, இலஞ்ச ஒழிப்பிற்கென ஒரு அதிகாரியை நியமித்துள்ளதென்றும், அவர், குற்றங்களைக் கண்டுபிடிப்பதற்காக மட்டுமல்லாமல், முடிந்தவரை குற்றங்கள் நிகழாதபடி பார்த்துக்கொள்ளும் வகையில் தக்க நடவடிக்கைகளை மேற்கொள்வதும் அவரது வேலை என்று குறிப்பிட்டிருக்கிருர்.

'இலாகா செயலாளர், கூட்டுச் செயலாளர், அமைச்சர் போன்ற பெரிய அதிகாரிகளே இதுபோன்ற குற்றங்களில் ஈடுபடுவது கவனிக்கப்படுமா?' என்று கேட்கப்பட்டபோது, 'பெரிய அதிகாரிகளைப் பொறுத்தவரையில், சர்க்கார் தகுந்த நடவடிக்கைகளை மேற்கொள்ளும்' என்று குறிப்பிட்டிருக்கிருர்.

# ‘கூடலூர் சென்னையுடனேயே இணைந்திருக்க வேண்டும்’

## நிதி அமைச்சர் காரணம் காட்டுகிறார்

சென்னை, நவ. 24—

மாநிலக் குழுவினரின் சிபாரிசுகளால் எழும்பியுள்ள பல பிரச்சினைகளையும் சென்னை சர்க்கார், மத்திய சர்க்காருக்கு எடுத்துக் காட்டியுள்ளனர் என்றும், கூடலூர் பகுதியைத் தமிழ் நாட்டுடன் இணைப்பது பற்றிய விஷயங்களும் அவற்றுள் அடங்கியுள்ளன என்றும், நிதி அமைச்சர் சுப்பிரமணியம் சென்னை சட்டசபையில் கூறியிருக்கிறார்.

சென்னைமாநிலத்திற்குத் தேவையான நீர்விசை மின்சாரத்தைப் பெறுவதற்கான முக்கியமான வசதிகள் எல்லாம் நீலகிரி பகுதியில் கிடைப்பதால், சென்னையின் பொருளாதார, நிதித் துறையைப் பொறுத்தவரையில், அப்பகுதிகள் சென்னையுடன் இருக்கவேண்டும் என்பது மிக முக்கியமான ஒன்றாகும். அது மட்டுமல்ல; நன்றாக அடர்ந்த காடுகள் அடங்கிய ஒரு சில பகுதிகளில் நீலகிரிதான் முக்கியமானது; கூடலூர் தாலுகாவின் கிழக்கு எல்லையை ஒட்டியவாறு ஓடும் மோயார் நதி மின்சார சக்தி உற்பத்தியினால் மட்டுமேயன்றி, பவானி நதியின் கிளையாகச் செல்லும் அந்நதி, கூடலூர் தாலுகாவில் பெருமளவு நிலங்களுக்குத் தேவையான நீர்ப்பாசனம் அளிப்பதாகவும் இருந்து வருகிறது. எனவே, பொருளாதார நிதித் துறைகளுடன், நீர்ப்பாசன வசதியையும் மின்சக்தி விநியோகத்தையும் கணக்கிட்டால், மோயார் நதியின் முழு நீளப் பகுதியிலும், சென்னை சர்க்காரே முழு அதிகாரம் உடையதாக இருக்கவேண்டியிருக்கிறது.

பவானி நதியிலிருந்து நீர்ப்பாசன வசதி கிடைக்கச் செய்து அதனை அபிவிருத்தி செய்ய இந்த மாநில சர்க்கார், அண்மையில் பெருமளவுக்குப் பணம் செலவிட்டு பவானி சாகர் திட்டத்தை நிறைவேற்றியிருக்கிறது. கூடலூர் தாலுகா பிரிக்கப்படவேண்டிய நிலை இப்பொழுதோ அல்லது இன்னுஞ் சில காலம் பொறுத்தோ ஏற்படுவதாக இருந்தால் இந்த மாநிலத்திற்குத் தேவையான தேக்கு மரங்கள் கிடைக்க இயலாமல் போய்விடும். இது மட்டுமல்லாமல், கூடலூர் தாலுகாவிலுள்ள முதுமலை ரிசர்வ் மலைகள் மோயார் நதி பாயும் முக்கியமான இடமாக மட்டுமல்லாமல், இந்த மாநிலத்திற்கே அது ஒரு முக்கியமான மலைப் பகுதியாக இருந்து வருகிறது. நீலகிரியும் சில முக்கிய காரணங்களையொட்டி, நிர்வாக வசதியுடைய ஒரு இடமாக அமைந்திருக்கிறது.

மேற்குறிப்பிடப்பட்டுள்ள இந்தக் காரணங்களைச் சுட்டிக்காட்டி, சென்னை சர்க்கார், எந்தத் திட்டத்தை பொட்டி மாநிலங்கள் திருத்தி அமைக்கப்பட்டாலும், கூடலூர் தாலுகா, தமிழ் நாட்டுடனேயே இணைக்கப்படவேண்டும்' என்று மாநில புனரமைப்புக் குழுவினருக்கு எழுதியிருக்கின்றனர் என்றும் அவர் தெரிவித்திருக்கிறார்.

‘கூடலூர் பகுதியில், மலையாளிகள் பெரும்பான்மையராக இருந்தும் கூட, நீர்ப்பாசனம், மற்றும் இவைபோன்ற காரணங்களாலேயே மட்டும் தமிழகத்துடன் இணைக்கப்படவேண்டும் என்பதுதான் சர்க்காருடைய கருத்தா?' என்று மலையாள உறுப்பினரொருவர் கேட்டபோது, அமைச்சர், ‘மக்கள் எண்ணிக்கையைக் கணக்கிட்டாலும் கூட, கூடலூர் தாலுகா, கேரளத்துடன் இணைக்கப்படுவதைவிட தமிழ் நாட்டுடன்தான் இணைக்கப்படவேண்டும்,’ என்றார்.

காசர்கோடு

தென் கன்னட மாவட்டத்தைச் சேர்ந்த காசர்கோடு தாலுகா குறித்தும் சர்க்கார் மத்திய சர்க்காருக்கு எழுதியிருக்கின்றனராம்.

உறுப்பினர் ஒருவரது கேள்விக்குப் பதிலளிக்கையில் அமைச்சர் ‘எல்லாப் பகுதிகளைக் குறித்த பிரச்சினையிலும் ஒரே மாதிரியான கொள்கையையே கடைப்பிடிக்க வேண்டுமென்பதுதான் எங்கள் நோக்கமாகும்; அதுதான் எங்களது விருப்பமுமாகும். ஆனால் துரதிருஷ்டவசமாக, ஒரு குறிப்பிட்ட இடத்தைப் பொறுத்த பிரச்சினைகளில் கடைப்பிடிக்கப்படும் கொள்கைகளும், முறைகளும், மற்றொரு இடத்தைக் குறிப்பிட்ட பிரச்சினைகளில் மேற்கொள்ளப்படும்போது, நமக்குத் தொல்லைகளை விளைவித்து விடுகின்றன; எனினும், நிச்சயமாக, இந்த மாநில சர்க்கார், எல்லா பிரச்சினைகளிலும் ஒரேவகையான கொள்கைகளும், முறைகளும்தான் மேற்கொள்ளப்பட வேண்டுமென்று விரும்புகிறது," என்றும் குறிப்பிட்டார்.

---

தேவிகுளம், பீர்மேடு, கூடலூர்

## இணைப்பு வேண்டுமாம்

திரு - கொச்சி சட்டசபையில் தீர்மானம் நிறைவேற்றம்

திருவனந்தபுரம், நவ 24—

இன்று நடைபெற்ற திரு-கொச்சி மாநில சட்டசபைக் கூட்டத்தில், புதிய கேரள மாநிலம் உருவாவதற்கு ஒருமித்த ஆதரவு தெரிவிக்கப்பட்டிருப்பதுடன், தேவிகுளம், பீர்மேடு, கூடலூர் ஆகிய பகுதிகளைக் கேரள மாநிலத்திலேயே இணைத்திருக்க வேண்டும் என்ற கோரிக்கை, பெரும்பான்மையான வாக்குகளால் நிறைவேற்றப்பட்டிருக்கிறது.

திரு-தமிழ்ப் பகுதிகள் தமிழ் நாட்டுடன் இணைக்கப்பட வேண்டும் என்ற தி. த. நா. காங்கிரசின் கோரிக்கை, 76 வாக்குகள் அதிகம் பெற்று நிராகரிக்கப்பட்டிருக்கிறது. கோரிக்கைக்கு எதிராக 90 வாக்குகளும், ஆதரவாக 14 வாக்குகளும் மட்டுமே கிடைத்திருக்கின்றன.

எல்லாத் தமிழ்ப் பகுதிகளும் திரு-கொச்சியுடனேயே இருக்க வேண்டும் என்ற காங்கிரஸ், ம. சோ. கட்சியினர் கோரிக்கைகளுக்கு 12 வாக்குகள்தான் அதிகம் கிடைத்திருக்கின்றன.

கம்யூனிஸ்டுகள், புரட்சி சோஷலிஸ்டுகள், கேரள சோஷலிஸ்டுகள் ஆகியோர் இந்த இரண்டு தீர்மானங்களுக்கும் எதிராகவே வாக்களித்திருக்கின்றனர்.

ம. சோ. உறுப்பினர்கள், காங்கிரசாருடன் சேர்ந்து வாக்குச் செய்திருக்கின்றனர்.

முன்பு தி. த. நா. கா. உறுப்பினர்களாக இருந்து, தற்போது காங்கிரஸ் கட்சி உறுப்பினர்களாக மாறியுள்ள 12 உறுப்பினர்களும், டி. எஸ் இராமசாமி, கே சட்டநாத கரையாளர் ஆகிய இரண்டு சுயேச்சையாளர்களும், ஒன்பது தமிழ்த் தாலுகாக்களும் திரு-கொச்சியிலிருந்து பிரிக்கப்பட வேண்டுமென்பதை ஆதரித்து வாக்களித்திருக்கின்றனர்.

மாநில புனரமைப்புக் குழுவினரால் சிபாரிசு செய்யப்பட்ட புதிய உத்தேச கேரள மாநிலத்தில் சிபாரிசு செய்யப்பட்டுள்ள பகுதிகளுடன், சென்னை மாநிலத்துடனேயே இணைக்கப்பட வேண்டுமென்று கூறப்பட்டுள்ள இந்த 4 பகுதிகளும் இணைந்திருக்க வேண்டுமென்ற முடிவும், சபையில் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது.

இந்த முடிவுகளை, கம்யூனிஸ்டு உறுப்பினர்களும், இரண்டு சுயேச்சையாளர்கள் உட்பட மற்றத் தமிழ் உறுப்பினர்களும் எதிர்த்திருக்கின்றனர். இந்த இரண்டு சிபாரிசுகளையும் ஆதரித்து 59 வாக்குகளும், எதிர்த்து 47 வாக்குகளும் கிடைத்திருக்கின்றன.

மேற்குத் தொடர்ச்சி மலைகளுக்குக் கிழக்குப் பகுதியில் அமைந்திருக்கிற செங்கோட்டைத் தாலுகா பகுதிகளை மட்டுமே கேரள மாநிலத்திலிருந்து பிரித்துக்கொள்ளலாம் என்ற முடிவுக்கு ஆதரவாக 92 வாக்குகளும், எதிராக 14 வாக்குகளும் பெற்றுச் சபையில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டிருக்கிறது.

இது தவிர, உத்தேச கேரள மாநிலத்துடன், கூடலூர் தாலுகாவும் இணைக்கப்பட வேண்டுமென்ற முடிவுக்கு, சட்டசபை தி. த. நா. காங்கிரஸ் உறுப்பினர்களைத் தவிர்த்த மற்ற அனைவரும் ஒப்புதல் தந்து வாக்களித்திருக்கின்றனர்.

மத்திய சர்க்காரின் நேரடி நிர்வாகப் பொறுப்பின் கீழேயே இலட்சத் தீவுகள், அமிந்திவித் தீவுகள் இருப்பதற்கு, ஒரு மனதாக ஒப்புதல் அளித்துச் சபை சிபாரிசு செய்திருக்கிறது.

எல்லைகள் குறித்த பிரச்சினைகளில், சம்பந்தப்பட்ட சர்க்கார்களுக்கிடையே நட்புறவு முறையில் பேச்சு வார்த்தைகள் நடத்தியோ, அல்லது, நடுநிலையாளர்களைக் கொண்ட ஒரு எல்லைக் குழுவினரை அமைத்தோ முடிவு காணலாம் என்ற கம்யூனிஸ்டு கட்சியைச் சேர்ந்த உறுப்பினர் ஒருவரது பிரேரபணை, 12 வாக்குகள் பெரும்பான்மையில் தோற்கடிக்கப்பட்டிருக்கிறது — அவரது பிரேரபணைக்கு ஆதரவாக 47 வாக்குகளும், எதிராக 59 வாக்குகளும் கிடைத்திருக்கின்றன

எல்லைகளை நிர்ணயித்தல் குறித்த திட்டத்தில் பின்பற்றுவதற்கென கம்யூனிஸ்டு கட்சியினரால் கூறப்பட்ட ஒரு சில திட்டங்களையும் சபை நிராகரித்திருக்கிறது.

---

## கழகக் கூட்டம்

★

சத்திரப்பட்டி
சங்கரபாண்டியபுரம் அண்ணா திடலில்
29–11–55 மாலை 6 மணிக்கு
தலைவர் : கே. மகாலிங்கம்
பேசுபவர் :
எம். எஸ். ராமசாமி

### வெள்ளக்கோட்டை தி. மு. கழக உட்கிளை அமைப்புக் கூட்டம்

29-11-55 காலை 10 மணிக்கு, தோழர் ஆ. மாணிக்கவாசகம் இல்லத்தில், தோழர் எம். எஸ். இராமசாமி தலைமையில், வெள்ளக்கோட்டை தி. மு. கழக உட்கிளை அமைப்புக் கூட்டம் நடைபெறும்.

### ‘சங்கு’—பத்திரிகை துவக்க விழா

27—11—55 மாலை 4 மணிக்கு, சென்னை, மஹாஜன சபா ஹாலில் திரு. சி ஆர். சீனிவாசன் தலைமையில் நடைபெறும். திரு. வி. கே. நரசிம்மன் மேற்படி விழாவைத் துவக்கிவைப்பார்.

### குறள் வகுப்பு

27-11-55 காலை 10 மணிக்கு, சென்னை-மண்ணடி, எண் 94-95, புதுத் தெரு, இராசமன்னார் பாடசாலையில், திருவள்ளுவர் கழகச் சார்பில் நடைபெறும். காமத்துப் பாலில் ‘குறிப்பு அறிவுறுத்தல்’ என்ற அதிகாரத்திற்கு, சி. முருகேசனார் விளக்கவுரையாற்றுவார்.

• • •

27—11—55 காலை 9 மணிக்கு, திருச்சி, எண் 1, பெரிய செட்டித் தெரு, பாண்டியன் படிப்பகத்தில், திரு. தி. ரா. தருமராசன் குறள் வகுப்பு நடத்துவார்.

### வருடாந்திர விளையாட்டுப் போட்டி

27—11—55 மாலை 3 மணிக்கு, சென்னை-எழும்பூர் ஒய். எம். சி. ஏ. வருடாந்திர விளையாட்டுப் போட்டி விழா, திரு.சி டி ஜெபாசிங் தலைமையில் நடைபெறும். சிறுவர்களுக்கு இனிப்பும், பாலும் வழங்கப்படும்.

---

# ‘தனித் தமிழ் மாநிலம் தேவை’

## இலங்கை ஆளும் கட்சித் தமிழ் உறுப்பினர்கள் முடிவு

★

இலங்கை ஆளும் கட்சியான ஐக்கிய தேசியக் கட்சியின் வருடாந்திரக்கூட்டம் அண்மையில் நடைபெற இருக்கும்போது, இலங்கையில் சுதந்திரம் பெற்ற ஒரு தனித் தமிழ் மாநிலம் வேண்டும் என்ற கோரிக்கையை முன்வைப்பது என்று, இலங்கை சர்க்கார் பாராளுமன்றக் கட்சியின் தமிழ் உறுப்பினர்கள் முடிவெடுத்திருக்கின்றனர்.

தனித் தமிழ் நாடு பிரிக்கப்படாவிட்டால், சிங்களம், தமிழ் ஆகிய இரு மொழியினருக்கும் சுய அதிகாரம் கொண்ட மாநிலங்களைக் கொண்ட ஒரு கூட்டு சர்க்கார் ஏற்படுத்துவது என்றாயினும் கோருவதென மற்றொரு முடிவு செய்திருக்கின்றனராம்.

இத்தீர்மானம் குறித்து நேற்று இரவு நடைபெற்ற அவ்வுறுப்பினர்கள் கூட்டமொன்றில், சிங்கள, தமிழ் மொழியினராகிய இரு சாராருமே தங்கள் மொழி, கலாச்சாரம் ஆகியவை பாதுகாக்கப்பட்டு அபிவிருத்தியடைய வேண்டுமென்றும், அத்துடன், தங்களது அடிப்படை மனித உரிமைகள் பாதுகாக்கப்பட வேண்டும் என்றும் கோருவதினால், மேற்கூறப்பட்டுள்ள இரண்டுவிதமான முடிவுகளுள் ஏதாவது ஒன்றிற்கு அதிகாரபூர்வமாக வந்தே ஆக வேண்டும் என்றும் குறிப்பிட்டிருக்கின்றனர்.

---

# ஆச்சாரியார் பாதையில்...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

“சர்க்கார் எங்கிருந்தும்—எவரிடத்திலிருந்தும் இது விஷயத்தில் ஆலோசனைகள் கேட்க முன்வராது என்பதை ஆலை நிர்வாகிகளும், தொழிலாளர்களும் நன்றாக உணர்ந்துகொள்ள வேண்டும். உயர் நீதிமன்ற நீதிபதியையோ, அல்லது வேறெந்த சிவில் கோர்ட் நீதிபதியையோ சர்க்கார் நியமிக்கலாம்—அது அவர்களுடைய பொறுப்புங்கூட! தங்கள் இரு சாராரின் நலனையும் கவனித்து ஒன்றுபடச் செய்வதில்தான் சர்க்காரின் முழு கவனமும் இருந்து வருகிறது.”

—இவ்வாறு, முதலமைச்சர் காமராசர், சென்னை பெரம்பூரில், எஸ். ஆர் இ யூ (பெரம்பூர் கிளை)-வின் 27-வது வருடாந்திர மாநாட்டில் பேசுகையில், பெரம்பூர் பி. அண்டு சி ஆலைத் தொழிலாளர்களுக்கும்—ஆலை நிர்வாகத்தினருக்குமிடையே ஏற்பட்டுள்ள தகராறு குறித்து விசாரிக்க யார் நடுநிலையாளராக இருக்க வேண்டுமென்பதில் இரு சாராரும் உடன்பாட்டுக்கு வராததால், அது, தொழில் டிரிபியூனலின் விசாரணைக்கு விடப்பட வேண்டிய தொழில் தகராறு என்று குறிப்பிட்டுவிட்டுப் பேசியிருக்கிறார்.

---

# சென்னை பி. அண்டு...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

விசாரிப்பது என்ற உடன்பாட்டுக்கு ஒப்புதல் அளித்திருந்ததும், இந்த உடன்பாட்டிற்கு இரு சாராரும் ஒப்புதல் தெரிவித்து, வேலை நிறுத்தம் மேற்கொண்ட தொழிலாளர்கள் அனைவரும் மீண்டும் நேற்று வேலைக்குத் திரும்பிச் சென்றதும் நினைவிலிருக்கலாம்.

சென்னை தொழிற் சங்கமும், சர்க்காரிடம் ஆலைத் தொழிலாளர்களின் தகராறை விசாரணைக்கு விடும் உத்தரவை நிறுத்திவைத்து, உயர்நீதி மன்ற நீதிபதி ஒருவரை நடுநிலையாளராகக் கொண்டு தங்கள் விவகாரத்தைப் பைசல் செய்துகொள்ளும்படி கோரியிருந்தது

ஆனால், சர்க்கார் இப்போது விடுத்துள்ள அந்த உத்தரவில் மேலும் குறிப்பிடப்பட்டிருப்பதாவது :—

“சென்ற 24-ந் தேதி முதல் குறிப்பிட்ட ஆலையில் வேலை நிறுத்தம் நடைபெறுவதாக அறிவிக்கப்பட்டிருந்தது; அதை மேலும் நீடிக்க விடக்கூடாது என்பதற்காக, சர்க்கார், அதனைத் தடை செய்யும்படி கருதியது; எனவே, அந்த வேலை நிறுத்தம் மேலும் தொடர்ந்து நடைபெறக்கூடாது என்று, கவர்னர் தடைவிதித்திருக்கிறார்.”

---

## இப்போதைய சந்ததியினர் குள்ளமானவர்களா?

சென்னை, நவ. 25—

“போலீசுக்கு ஆட்களைத் தேர்ந்தெடுக்கும்போது, உயர அளவு 5 அடி 4 அங்குலம் இருக்க வேண்டுமென்று நிர்ணயிக்கப்பட்டிருப்பதை, இப்போதைய சந்ததியினர் குள்ளமாகவே இருப்பதைக் கவனித்து, ‘5 அடி’ என்று குறைத்து நிர்ணயிக்குமா?” என்று சட்டசபையில் கேட்கப்பட்டபோது, நிதி அமைச்சர் சுப்பிரமணியம், “சாதாரணமான உயரம் 5 அடி 4 அங்குலமாக இப்போதும் இருப்பதால், நிர்ணய அளவைக் குறைக்க வேண்டிய அவசியமில்லை” என்றார்.

---

## சொற்பயிற்சிக் கூட்டங்கள்

ஃ ஃ ஃ

27—11—55 மாலை 5 மணிக்கு சென்னை 16-வது வட்ட தி. மு. கழகப் பணிமனையில், தோழர் கே. கணபதி தலைமையில் நடைபெறும். ‘அன்றும்—இன்றும்’ எனும் பொருள் பற்றி தோழர்கள் பலர் பேசுவர்.

ஃ ஃ ஃ

27—11—55 காலை 9 மணிக்கு, சென்னை 33-வது வட்ட கிளைக் கழக கட்டிடத்தில், தோழர் அன்பரசு தலைமையில் நடைபெறும். தோழர்கள் மு. சிவராசு, செகநாதன் ஆகியோர் ‘ஏன் தாழ்ந்தோம்’ எனும் பொருள் பற்றி பேசுவர்.

ஃ ஃ ஃ

27—11—55 காலை 9½ மணிக்கு சென்னை ஓட்டேரி இராமானுசம் தோட்டத் தெரு, திரு. வி. க. மறுமலர்ச்சி மன்றத்தில், தோழர் எஸ். கிருட்டிணன் தலைமையில் ‘திரு வி. க-வும், சமுதாயமும்’ எனும் பொருள் குறித்துச் சொற்பயிற்சிக் கூட்டம் நடைபெறும். தோழர்கள் பலர் பேசுவர்.

ஃ ஃ ஃ

27—11—55 காலை 9 மணிக்கு சென்னை 42-வது வட்டத் தி. மு. கழகப் பணிமனையில் நடைபெறும். ‘நாட்டுப் பிரிவினை ஏன்?’ என்பது பற்றித் தோழர்கள் பலர் பேசுவர்.

ஃ ஃ ஃ

27-11-55 காலை 10 மணிக்கு, சென்னை — சிந்தாதிரிப்பேட்டை, எண் 126, சாமிநாய்க்கன் தெரு, கலைக் கதிர் கழகத்தில் சொற்பயிற்சிக் கூட்டம் ஆரம்பமாகும். தோழர் எஸ். எஸ். தென்னரசு வ. உ. சி. படத்தைத் திறந்து வைத்துப் பேசுவார். ‘கப்பலோட்டிய தமிழன்’ எனும் பொருள் குறித்து தோழர்கள் பலர் பேசுவர்.

---

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம். ஏ. அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப் பெற்று, (24 சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம் சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன் எம். ஏ.

